( 12 )

ஷையாரின் மற்றொரு கடிதம்.

எமது அனுபவத்தில் 116-ம் பக்கம் 115-ம் மருந்தான "குன்மாதி எட்டுக்கும் பெருங்காயச் சூரணம்" என்ற முறையை யான் அநேகருக்குக் கொடுத்துக் குணமடையக்கண்டு மகிழ்ச்சியடைந்து வருவதன்லியில் ஒரு முக்யமான கேஸை இங்கெழுதி எம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இங்கிருந்து தென்திசையில் 1 மைலில் உள்ள மலகபல்லி என்ற கிராமத்தில் செறுகூறி நாராயணன் என்ற குடியானவன் (கம்மா) 45 வயதுள்ளவன். அவனுக்கு பரிணமசூலை என்று நம் அபிப்ராயம். சென்னை போய் X-ray முதற்கொண்டு எடுத்துப் பார்த்தும், அலோபதிக் சிகித்ஸை ஒரு வருடம் செய்தும் அவனுக்குக் குணமாகவில்லை. மிக்க வருத்தத்துடன் இருந்தான். அவனுக்கு நான் மேற்கூறிய பெருங்காயச் சூரணத்தை உபயோகிக்க, வலி குறைவடைந்து, சாப்பாடு ஜீரணமாகிக் கொண்டும் நல்ல முறையிலிருக்கிறதை தெரிவித்துக்கொள்கிறேன். இன்னும் பல முறைகள் தயார்செய்து வருகிறேன்.

K. R. GUHUN,
Peddavaru,
21—8—51.

( 13 )

ஐயா,

ஸரஸ்வதி மகாலில் 10—11—51-ல் சில புஸ்தகங்கள் வாங்கிச் சென்றேன். அதில் கண் வியாதிகளின் மருந்தைச் செய்து பலருக்குப் போட்டதில் குணமிருந்தது. பலரும் என்னிடம் கண் நோய் தீர வந்து போகிறார்கள். அவர்கள் வருவதற்கு சரஸ்வதி மகால்தான் காரணம். ஹோமியோபதி டாக்டராயிருந்தாலும் இதுவரை ஆயுர்வேத மருந்தே உபயோகித்து வருகிறேன்.........

S. R. நாராயணன்,
32. ரங்கநாத பிள்ளை தெரு,
சேலம், 13—2—52.

( 14 )

10-வது முறையான குன்மத்திற்கு மாத்திரை என்னும் மருந்தினால் கொடிய வயிற்றுவலி குணமாகி இருக்கிறது, நான் பரம்பரைக் கிராம வைத்யன். கிராமங்களில் வைத்யம் செய்து கொண்டிருக்கிறேன். இதைப்போன்ற நூல்களை வெளியிட்டிருந்தால் அவைகளை எமக்கு அதிவிரைவில் அறிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**கோபாலகிருஷ்ணன்,**
திருவாடையார்கோவில்,
கண்டமங்கலம் போஸ்டு,
**விழுப்புரம்.**

( 15 )

நான் தஞ்சை சரஸ்வதி மகால் வெளியீடு நயனரோக சிகித்ஸைமூலம் ரோக நிதானம் தெரிந்து அதில் சொல்லியிருக்கும் முறைகளின்படி அநேகம் பேருக்கு மருந்தைப் பிரயோகித்து சுமார் 1000 பேர்வரை குணமடைந்திருக்கிறார்கள். ரோக நிதானங்கள் விபரமாய் சொல்லியிருக்கிறபடியேதான் இருக்கிறது. நான் தற்போது இதையே முக்யமான தொழிலாகக் கொண்டு, வந்தவர்களுக்கு மருந்து கொடுத்துக்கொண்டிருக்கிறேன். இது ஏழைகளுக்கு மிக உபயோகமாயிருக்கிறது. இம்மருந்துகளுக்குச் சென்னை முதலான இடங்களிலிருந்தும் ஜனங்கள் வருகின்றனர்.

**T. N. Venkatarama Iyer,**
Optician,
**குத்தாலம்.**
24—6—52.